2 பக்கங்கள் 15 காசுகள்

பதிவு எண் எம்: 8798

# தீக்கதிர்

இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சி [மார்க்சிஸ்ட்] நாளிதழ்

கதிர்: 13 மதுரை 16-10-75 வியாழன் மலர் 215

### ஊட்டச்சத்தில்லாமல் பார்வையிழந்தோர் 20 லட்சம்

கொச்சின், அக். 14— இந்தியாவிலுள்ள 60 லட்சம் பார்வையற்றவர்களில் 20 லட்சம் பேர்களின் கண்பார்வையின்மைக்கு காரணம் போஷாக்கான உணவு இல்லாததே ஆகும் என கண் பார்வையற்றவர்களுக்கான காமன்வெல்த் சொசைட்டியின் தலைவர் ஒருவர் கூறியுள்ளார்.

போஷாக்கு உணவு குறைவு காரணமாக கண் பார்வை இழந்தவர்கள் பெரும்பான்மையாக இருக்கும் தமிழ்நாட்டிலுள்ள 55 கிராமங்களை நிவாரணப் பணிகளுக்காக தேர்ந்தெடுத்துள்ளதாகவும் அவர் தெரிவித்தார்.

### ஒரு மாத காலம் 'லே-ஆப்'

தாணு, அக். 14— மராட்டிய மாநிலத்தில் தாணுவுக்கு அருகில் உள்ள மஜிவாடாவில் இயங்கி வரும் பேப்பர் தொழிற்சாலையில் 19 தொழிலாளர்களுக்கு கடந்த வியாழக்கிழமையிலிருந்து ஒரு மாத காலத்துக்கு லே-ஆப் விடுத்துள்ளது அந்த நிர்வாகம்.

மார்க்கெட்டில் ஏற்பட்டுள்ள மந்த நிலைமையே இந்த 'லே-ஆப்'க்கு காரணம் என்று கூறுகிறதாம் நிர்வாகம்.

## ஒரு தலைமுறையில் கூட வறுமை நீங்காது
## அனைத்து மக்களும் அரசுக்கெதிராக இருந்தனர்
### அமெரிக்க குழுவினரிடம் இந்திய பிரதமர்

புதுடெல்லி, அக். 11— வறுமைக்கு எதிரான போராட்டம் நீண்டகாலத்திற்குரியது. வறுமை ஒரே நாள் இரவில் அகற்றக் கூடியதல்ல. ஒருதலைமுறைக் காலத்தில்கூட அதனை அகற்றிவிட முடியாதுஎன்று 28 ஆண்டு சுதந்திர இந்தியாவின் பிரதமர் இந்திரா காந்தி கூறியுள்ளார்.

அமெரிக்காநாட்டில்உள்ள லாஸ்ஏஞ்சல்ஸிலிருந்து வந்திருந்த குழுவினரோடு பேசிக்கொண்டிருந்தபோது மேற்கண்டவாறு கூறினர்.

இந்தியாவிற்கு இரு மட்ங்கு பிரச்சினைகள் உள்ளன. பொருளாதாரத்தில் பின்தங்கியநிலைமை, தொழில்மயமாக்குதல் ஆகியவைகளே அவ்விருபிரச்சினைகள். பணக்கார நாட்டில் வாழும் மக்களுக்கு இந்தியாவிற்குள்ள பிரச்சினைகளை புரிந்துகொள்ள முடியாது என்றும் அமெரிக்கர்களிடம் பிரதமர் கூறினர்.

பணவீக்கம்சம்பந்தமாக பேசும்போதே, பிரதமர் இந்திரா காந்தி, கடந்த வருடம் கிட்டத்தட்ட அனைத்து பகுதி மக்களும் அரசாங்கத்துக்கு எதிராக இருந்தார்கள். தொழிலாளர்களின் பஞ்சப்படி நிறுத்தி வைக்கப்பட்டிருந்ததால் அவர்கள் தொல்லை கொடுத்தார்கள். உரங்களின் விலை ஏறியதால் விவசாயிகள் கோபமாக இருந்தார்கள். எனினும் பணவீக்கத்தைத் குறைப்பதற்கு அரசாங்கம் நடவடிக்கைகள் எடுத்தது. பணவீக்கம் உயராமல், தொழிற்சாலைகளுக்கு உதவ நாங்கள் வழிகள் கண்டுள்ளோம்" என்றும் கூறினர்.

மேலும், அவசரநிலைப் பிரகடனத்தால் நாட்டில் கட்டுப்பாடான சூழ்நிலை ஏற்பட்டுள்ளதாம். இந்நிலைமை சமுதாயத்தின் அங்கமாக நிரந்தரமாகநீடிக்கும்என்றும் கூறினர்.

### சோவியத்நாட்டில் மிகப்பழையநகரம் கண்டுபிடிப்பு

அஷ்காபாத். அக். 10— அல்தின் தேபே என்னுமிடத்தில் வெண்கல யுகத்தைச் சேர்ந்த ஒரு நகரத்தைச் சோவியத் புதைபொருள் ஆராய்ச்சியாளர்கள் கண்டுபிடித்துள்ளனர். சோவியத் யூனியனில் மிகப் பழமையான நகரம் இது என்று கருதப்படுகிறது. 'அல்தின் தேபே' என்றால் 'தங்கமலை' என்று பொருள். 4000 ஆண்டுகளுக்கு முன்பு, ஒரு குன்றின் மீது இது இருந்தது என்று ஆய்வாளர்கள் கூறுகின்றனர்.

### பாரசீக வளைகுடாவிலும் அமெரிக்க ராணுவ தளம்

மாஸ்கோ, அக். 11— எண்ணெவள அரபு நாடுகளுக்கு அருகில் உள்ள பாரசீக வளைகுடாவில் மிகப் பெரிய, யுத்ததந்திரரீதியான கப்பல் ராணுவத் தளத்தையும் விமான ராணுவத் தளத்தையும் கட்டுவதற்கு அமெரிக்கா மறைமுகமாக முயற்சிகள் செய்து வருகிறதுஎன சோவியத் யூனியனின் பிராவ்தா குற்றஞ்சாட்டியுள்ளது.

மேலும் பசிபிக் மகா சமுத்திரத்தில் உள்ள அமெரிக்கா ராணுவத் தளங்களோடும், இந்துமகா சமுத்திரத்தின் டையகோ கார்சியா தீவில் கட்டப்படும் ராணுவத் தளத்தோடும் பாரசீக வளைகுடாவில் கட்ட திட்டமிட்டுள்ள அமெரிக்க ராணுவத் தளம் மிக நெருக்கமான தொடர்புகொண்டதாக இருக்கும் என்றும் அப்பத்திரிகை கூறியுள்ளது.

### சிலி நாட்டு அகதிகள் அல்ஜீரியாவில் தஞ்சம்

அல்ஜிர்ஸ், அக். 12— அல்ஜீரிய நாட்டு அரசாங்கமானது, சிலிநாட்டு அகதிகள் 16 பேருக்கும், பிரேஜில் நாட்டு அகதி ஒருவருக்கும் அடைக்கலம் கொடுத்துள்ளது.

சிலிநாட்டுத் தலைநகரான போனஸ்அயர்ஸிலிருந்து வந்தவர்கள் இவர்கள். அங்குள்ள ஐ நா சபைக் கேம்பில் வாழ்ந்தவர்கள். அக்கேம்பில் இருந்த வாழ்க்கை நிலைமையை எதிர்த்து ஐ நா சபை அதிகாரிகளை பணயக் கைதிகளாக வைத்திருந்தவர்கள்.

அவர்கள் முயற்சி தோற்றுப் போனதாலே அவர்கள் அங்கிருந்து தப்பியோடி அல்ஜீரியா நாட்டை அடைந்தனர்.

## நெய்வேலி அனைத்துச் சங்கங்கள் பிரதமர் இந்திராவுக்கு கூட்டாக தந்தி
## போனஸ் குறைப்பு சட்டத்தை மறுபரிசீலனை செய்யக் கோரி

நெய்வேலி, அக். 14— போராடிப் பெற்ற 8.33 சதவீதம் குறைந்தபட்ச போனஸ் உரிமையை மறுக்கும் போனஸ் குறைப்பு அவசரச் சட்டத்தை மறுபரிசீலனை செய்யக்கோரி பிரதமர் இந்திராவுக்கு நெய்வேலியில் உள்ள முக்கிய சங்கங்கள் கூட்டாக தந்தி ஒன்றை அனுப்பியுள்ளன.

சி ஐ டி யூ, தொ. மு. ச, அ தி மு க, ஐ என் டி யூ சி, பணியாளர் சங்கம் ஆகிய 5 சங்கங்கள் சார்பில் கடந்த 8-ந் தேதியன்று அனுப்பப்பட்டுள்ள தந்தி வருமாறு:—

"தொழிலாளர்களது பொருளாதாரக் கஷ்டத்தைக் கணக்கில் கொண்டு, போனஸ் சம்பந்தமாக 25—9—75-ல் பிறப்பிக்கப்பட்டுள்ள அவசரச்சட்டத்தை மறுபரிசீலனை செய்யவேண்டும், போனஸ் சம்பந்தமாக அவசரச்சட்டத்துக்கு முன்பிருந்த நிலையை மீண்டும் கொண்டுவர வேண்டும், போனஸ் பரிசீலனை குழுவின் பரிந்துரைகளை நிறைவேற்றவேண்டும்" இவ்வாறு அத்தந்தியில் கோரப்பட்டுள்ளது.

கோவையில் கடந்த 7-10-75 ல் கூடிய 9 தொழிற்சங்கங்களின் அறைகூவல்படி இம்மாதம் 24 ந் தேதி ஒருநாள் அடையாள வேலை நிறுத்தம் செய்வது என்றும் இங்குள்ள தொழிற்சங்கங்கள் முடிவு செய்துள்ளன. அதேபோல் 15, 16, 17 தேதிகளில் 'கோரிக்கை அட்டைகள்(பேட்ஜ்) அணியும்' இயக்கமும் நடத்தப்படுகிறது.

அடையாள வேலை நிறுத்தத்தை அறிவிக்கும் பொருட்டு, கடந்த 10ந்தேதி நெய்வேலி லிக்னைட் கார்ப்பரேசன் நிர்வாகத்துக்கு வேலைநிறுத்த நோட்டீசும் கொடுத்துள்ளன.

அன்று மாலை 7மணி அளவில் வட்டம் 24ல் சி ஐ டி யூ திடலில் விளக்கப் பொதுக்கூட்டமும் நடந்தது. சி ஐ டி யூ தலைவர் தோழர் டி. காசிநாதன் தலைமைவகித்தார்.

போனஸ்குறைப்பு அவசரச்சட்டத்தைப் பற்றியும், அதனால் தொழிலாளர் வர்க்கம் எந்த அளவுக்கு பாதிக்கப்பட்டுள்ளது என்பதை விளக்கியும், இது குறித்து உழைப்பாளி மக்கள் மேற்கொள்ள வேண்டிய ஒன்றுபட்ட நடவடிக்கைகளின் அவசியத்தை வற்புறுத்தியும் தொழிலாளர் முன்னேற்றச் சங்க பொதுச்செயலாளர் சி. கோவிந்தன், பொருளாளர் நவநீதம் ஆகியோரும், ஐ என் டி யூ சி செயலாளர் டி ராமமூர்த்தியும், அதிமுக சங்கத்தலைவர் எம் கோவிந்தசாமி, பொதுச் செயலாளர் எஸ். ஆண்டகுருநாதன், பணியாளர் சங்க பொதுச் செயலாளர் மு சு மணி, சி ஐ டி யூ பொதுச் செயலாளர் எஸ். வீரபத்திரன், செயலாளர் கே திருவேங்கடம் ஆகியோர் பேசினர்.

கோரிக்கை அட்டை (பேட்ஜ்) அணியும் இயக்கத்தையும், அடையாள வேலை நிறுத்தத்தையும் வெற்றி பெறச் செய்ய வேண்டுமாய் தொழிலாளர்களுக்கு அறைகூவல் விடுத்தனர்.

### காமராஜ் மறைவுக்கு அஞ்சலி

கூட்டத்தின் துவக்கத்தில் ஸ்தாபனக் காங்கிரஸ் தலைவர் திரு கே காமராஜ் மறைவுக்கு 2 நிமிடம் மவுன அஞ்சலி செலுத்தப்பட்டு, சிஐடியூ செயலாளர் ஆர். பாலசுப்ரமண்யன் முன்மொழிந்த அனுதாபத் தீர்மானமும் நிறைவேற்றப்பட்டது.

## மின் ஊழியர் சங்கமும் ஆட்சேபம்

போனஸ் சட்டத்தைத் திரும்பப் பெறக்கோரி இம்மாதம் 15, 16, 17 தேதிகளில் கோரிக்கை பேட்ஜ் அணிவது என்றும், 24-ந் தேதி அடையாள வேலைநிறுத்தம் செய்வது என்றும் தமிழ்நாடு மின்சார ஊழியர் சங்கம் (சிஐடியூ)தீர்மானித்துள்ளது. அதற்கான முடிவுகள் கடந்த 11, 12 தேதிகளில்நடந்த சங்கத்தின் மாநிலப்பொதுக்குழு கூட்டத்தில் எடுக்கப்பட்டு வேலைநிறுத்த நோட்டீசும் கொடுக்கப்பட்டது.

### உண்ணாவிரதம்

மின் தொழிலாளர்களது தீர்க்கப்படாத கோரிக்கைகளை வற்புறுத்தி நவம்பர் 12-ந் தேதியன்று மாநிலம் முழுதும் மின்வாரிய அலுவலகங்கள் முன்பு உண்ணாவிரதம் இருப்பது எனவும் முடிவு எடுக்கப்பட்டது.

வேலூரில் நடந்த இந்தப் பொதுக்குழுவுக்கு சங்கத் தலைவர் தோழர் து ஜானகிராமன் தலைமைவகித்தார்.

வடாற்காடு மாவட்ட சிஐடியூ தலைவர் கே- ஆர். சுந்தரம சிஐடியூ கொடியைஏற்றி வைத்தபின் வரவேற்புக்கமிட்டித்தலைவர் தோழர் டி ஆர் புருஷோத்தமன் வரவேற்றுப் பேசினர். பொதுச் செயலாளர் தோழர் ஜி ஜி சுந்தரம் சமர்ப்பித்த அறிக்கையின் மீது நடந்த விவாதத்தில் 20 பிரதிநிதிகள் கலந்து கொண்டனர்.

கூட்ட ஆரம்பத்தில் மறைந்த தியாகிகளுக்கு அஞ்சலி செலுத்தப்பட்டது.

தமிழ்நாடு மின்சாரத் தொழிலாளர்மத்திய அமைப்பின் பொருளாளர் வி.மீனாட்சிசுந்தரம், எண்ணூர் மின்சாரத் தொழிலாளர் சங்க துணைத்தலைவர் எம். ஆர், எஸ். மணி, வேலூர் திட்ட மின்சாரத் தொழிலாளர் சங்க இணைச் செயலாளர் வள்ளல்பிரான் ஆகிய தோழர்கள் பொதுக்குழுவை வாழ்த்திப் பேசினர்.

போனஸ் அவசரச் சட்டத்தையும் அவசர நிலையையும் வாபஸ் பெறக்கோரியும் மின்வாரியத்தில் தொழிற்சங்க உரிமைகள் பறிக்கப்படுவதைக் கண்டித்தும், மின் தொழிலாளர்களின் தீர்க்கப்படாத கோரிக்கைகளை உடனே பேசித்தீர்க்கக் கோரியும், கோரிக்கைகளைப் பெற ஒன்றுபட்ட நடவடிக்கைகளுக்கு அழைப்பு விடுத்தும் தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன.

### தென்காசியில்

போனஸ் குறைப்பு அவசரச் சட்டத்துக்கு ஆட்சேபம் தெரிவித்தும், அந்த அவசரச் சட்டத்தை வாபஸ் பெறக்கோரியும் கடந்த 10-ந் தேதியன்று தென்காசி மின்வாரிய வருவாய்ப்பிரிவு அலுவலகம் முன்பு ஆர்ப்பாட்டம் செய்து முழக்கம் செய்தனர், இந்த ஆர்ப்பாட்டத்துக்கு அய்யப்பன் தலைமை வகித்தார்.

### குமரிமாவட்ட தோட்டதொழிலாளர்களின்
## நீண்டநாள் சம்பள உயர்வு கோரிக்கை
### உடன்பாடுஏற்பட்டது ரூ.8-10 ஆகஉயரும்

நாகர்கோவில், அக். 14— இதுவரை நாள் ஒன்றுக்கு ரூ. 5·22 வீதம் சம்பளம் பெற்றுவந்த குமரி மாவட்ட தோட்டத் தொழிலாளர்கள் இனி மேல் ரூ 8.10 வீதம் பெறுவர்.

குமரி மாவட்டத்தில் உள்ள தோட்டத் தொழிலாளர்களும் அவர்களது சங்கங்களும் நீண்டநாட்களாக சம்பள உயர்வு கோரிக்கையை வற்புறுத்தி வந்ததைத் தொடர்ந்து நடந்த பேச்சுவார்த்தையில் இதற்கான உடன்பாடு ஏற்பட்டது.

தொழிலாளர் நல இலாகாவின் இணை ஆணையாளர் திரு. பார்த்தசாரதி முன்னிலையில் நடந்த இந்தப் பேச்சுவார்த்தையில் சி ஐ டி யூ சார்பில் தோழர் ஜெ. ஹேமச்சந்திரனும், ஸ்தாபன காங்கிரஸ் தொழிற்சங்கம் சார்பில் திரு என். நாராயணபிள்ளையும் மற்றும் தோட்ட அதிபர்களும் கலந்து கொண்டனர்.

நாகர்கோவில் வாழ்க்கைச் செலவுப் புள்ளி 365க்கு ரூ 7-80 சம்பளமும் அதற்கு மேல்உள்ள ஒவ்வொரு புள்ளிக்கும் இரண்டரைகாசுவீதமும் ஒவ்வொரு கிலோ பாலுக்கு 35 காசு வீதமும் கொடுப்பதென இப்பேச்சு வார்த்தையில் ஒப்புக் கொள்ளப்பட்டது.

இதன்படி, இம்மாவட்டத்தில் உள்ள தனியார் தோட்டங்களைச் சேர்ந்த 3ஆயிரம் தொழிலாளர்களது சம்பளம் ரூ 8-10ஆக உயரும்.

## ஜனநாயகபாதுகாப்பு பொதுக்கூட்டங்கள்

திருச்சி, அக். 14— திருச்சி உறையூரில் கடந்த 4ந் தேதியன்று மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி, ஜனநாயக மாதர் சங்கம் ஆகியவற்றின் சார்பில்ஜனநாயக பாதுகாப்புப் பொதுக்கூட்டம் நடந்தது. தோழர் ஜானகி ராமச்சந்திரன் தலைமை வகித்தார்.

மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் மாநிலசெயற்குழு உறுப்பினர் ஆர். உமாநாத. மாதர் சங்க மாநிலநிர்வாகக் குழுஉறுப்பினர்கள்சென்னை மைதிலி சிவராமன், தஞ்சை விசாலாட்சி, சேலம் கங்தாயி ரெங்கசாமி, கோவை வீரம்மாள், நெல்லிக்குப்பம் ஷாஜாதி கோவிந்தராஜன், போடி கஸ்தூரி ஆகியோர் இன்றைய அரசியல் நிலை குறித்தும் மாதர்களது கடமை குறித்தும் விளக்கினர்.

### கோவை

கோவை நகர் 22-வது வட்ட மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் கிளை சார்பில் கடந்த 6ந் தேதியன்று பொதுக்கூட்டம் நடந்தது. தோழர் பி கோவிந்தன் தலைமை வகித்தார்.

பொன்மலை வி. பரமேஸ்வரன், நகர்க்கமிட்டி உறுப்பினர் எம் கோவிந்தன், பாரம் தூக்கும்தொழிலாளர்சங்கத் தலைவர் பி முத்துச்சாமி, சி கே நடராஜ், ரவிச்சந்திரன், தேவசி, பெருமாள் ஆகியதோழர்கள்இன்றைய அவசரநிலை குறித்தும் உழைக்கும் மக்களின் கடமை குறித்தும் பேசினர்.

### சேலத்தில்

சேலம் நகர் கருங்கல் பட்டி பிள்ளையார் கோவில் மைதானத்தில் மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி சார்பில் கடந்த 9ந் தேதி ஜனநாயக பாதுகாப்பு பொதுக்கூட்டம் நடந்தது. தோழர் ஏ நரசிம்மன் தலைமை வகித்தார்.

கட்சியின் நகர்ச் செயலாளர் பி கிருஷ்ணன் மாவட்டச் செயலாளர் கே எஸ் அர்த்தநாரி, மாநில செயற்குழு உறுப்பினர் என் சங்கரய்யா ஆகியோர் இன்றைய அரசியல் நிலையும் மக்களது கடமையும் என்பது குறித்து விளக்கவுரையாற்றினர்.

### மத்திய அரசுக்கு வேண்டுகோள்

இக்கூட்டங்களில் அவசரநிலையை வாபஸ் பெறக் கோரியும், 'மிசா' போன்ற சட்டங்களின் கீழ் கைது செய்யப்பட்டு காவலில் உள்ள அரசியல் தலைவர்களையும், ஊழியர்களையும் விடுதலை செய்யக் கோரியும் மத்திய அரசுக்கு வேண்டுகோள் விடுக்கப்பட்டது,

### மாநில அரசுக்கு வேண்டுகோள்

தமிழகத்தில் ஊர்வலங்களுக்கு விதிக்கப்பட்டுள்ள தடை உத்திரவுகளை ரத்துச் செய்யும்படி தமிழக அரசுக்கும் வேண்டுகோள் விடுக்கப்பட்டது.

## பரமக்குடியில் 12,000 நெசவாளர்கள் அவதி
## ரூ. 35 லட்சம் துணி தேக்கம்

பரமக்குடி. அக். 14— முகவை மாவட்டம் பரமக்குடி — எமனேஸ்வரம் பகுதிகளில் 35லட்சம்ரூபாய் மதிப்புள்ள துணிகள் தேங்கிக் கிடக்கின்றன. இதனால் 23 கூட்டுறவு உற்பத்தி மற்றும் விற்பனைச் சங்கங்கள் இயங்காது அவற்றில் பணிபுரியும் சுமார்12ஆயிரம்நெசவாளர்கள் வேலையின்றி அவதிப்படுகிறார்கள், அந்த 12 ஆயிரம நெசவாளர்குடும்பங்கள் துன்பத்தில் ஆழ்த்தப்பட்டுள்ளன. பட்டினியால் துடிக்கின்றன.

மேலும், தொடர்ந்து செயல்படுவதற்குத் தேவையான நூல்பட்டு முதலிய கச்சாப் பொருட்களை வாங்க முடியாமல் நெசவாளர் கூட்டுறவுசங்கங்கள் மொதத்துக்குள செயலற்றுப் போகும் அவலநிலைமை உருவாகி வருகிறது.

எனவே, தேங்கியுள்ள கைத்தறி ஜவுளிகளை உடனடியாக அரசே ஏற்று, கூட்டுறவு நெசவாளர் சங்கங்கள் தொடர்ந்து செயல்படவும், நெசவாளர்களும் அவர்தம் குடும்பங்களும் வாழவும் வழிவகை செய்யவேண்டும் என்று நெசவாளர் சங்கங்கள் கோரிக்கை வைத்துள்ளன.

## மேற்கு வங்கத்தில் எண்ணெவளம் கண்டுபிடிப்பு

புதுடெல்லி, அக். 10— மேற்கு வங்காளத்தில் பாரதீப நகருக்கு கிழக்கே 80 மைல் தூரத்தில் எண்ணெ வளம் கண்டுபிடிக்கப்பட்டுள்ளது.

துளைபோட்டு கண்டுபிடிக்கப்பட்ட எண்ணெயைசோதனை செய்து பார்த்ததில் அப்பகுதியில் எண்ணெவளம்மிகுந்திருப்பதாக தெரிகிறது என நிபுணர்கள் தெரிவித்தனர்.

இச்சோதனை நடவடிக்கைகளை அமெரிக்க நாட்டைச் சேர்ந்த எண்ணெ கண்டுபிடிப்பு கம்பெனியின் குழு மேற்கொண்டது.

4500 மீட்டர் ஆழம் துளைபோட்டு பார்ப்பதுஎன திட்டமிடப்பட்டது ஆனால் 2000 மீட்டர் ஆழம் துளைபோட்டவுனேயே எண்ணெ கிடைத்துவிட்டது.

மேற்கு வங்காள கடலின் கரைப்பகுதியில் எண்ணெ கண்டுபிடிக்கும் வேலைகள் செப்டம்பர் 21-ம் தேதிதான் ஆரம்பிக்கப்பட்டன.

வேலை துவங்கப்பட்ட 19 நாட்களிலேயே எண்ணெ வளம் கண்டுபிடிக்கப்பட்டுள்ளது.

துளைகளில் பீறிட்டு வரும் எண்ணெயைசோதனை செய்ய வேண்டுமானல், அத்துளைகளைச் சுற்றி எஃகு வளையங்களை இறுக்கவேண்டும். அதன் பின்புதான் தேவையான அளவு ஆழத்திற்கு துளையிட வேண்டும். இவ்வாறு செய்த பின்பு கிடைக்கும் எண்ணெயை சோதனையிட்டால்தான் எண்ணெக் கிணறுகளின் எண்ணெ உற்பத்தி சக்தி, மற்றும ஏனைய விபரங்களைக் காண முடியும்.

இம் முதல் கிணற்றை சோதனை செய்த பின்பு அப்பகுதியில் 6கிணறுகள்வரை சோதனை செய்ய ஏற்பாடுகள் மேற்கொள்ளப்பட்டுள்ளன. அச்சோதனைகளுக்குப் பிறகே இயந்திரங்கள் அமைக்க ஏற்பாடுகள் செய்யப்படும்.

மேலும் கல்கத்தாவுக்கு சில மைல் தூரத்தில் உள்ள பகுட்டாலா என்னுமிடத்தில் எண்ணெ கண்டு பிடிப்புக்காக துளை போடப்படுகிறது.

கடந்த வருடம் பிப்ரவரி 19ல்தான் மகாராஷ்டிரமாநிலத்தில் பம்பாய் பகுதியில் எண்ணெ கண்டு பிடிக்கப்பட்டது. அதன்பின்பு அப்பகுதியில் 6 இடங்களில் எண்ணெ கிணறுகள் தோண்டப்பட்டன. 6 இடங்களும் அப்பகுதியில் நல்ல எண்ணெ வளம இருப்பதையே நிரூபித்துள்ளன.

மேலும் அடுத்த ஆண்டின் மத்திய காலத்திலிருந்து வருடத்திற்கு 15 லட்சம டன் முதல் 20 லட்சம் டன் வரை எண்ணெ உற்பத்தி செய்யமுடியும் என்று கருதப்பட்டுள்ளது.

## பிலிப்பைன்ஸ் துருப்புகள் மரணம்

மணிலா. அக் 12— பிலிப்பைன்ஸ் நாட்டில் அதிருப்தி முஸ்லீம்களுக்கும் அந்நாட்டு அரசாங்க ராணுவத்துக்கும் இடையே நடைபெற்ற மோதலில் சுமார்100 ராணுவ வீரர்கள் பலியாயினர். இம்மோதல் ரம்ஜான் பண்டிகையன்று நிகழ்ந்துள்ளது.

மலையடிவாரங்களில்வாழ்ந்து கொண்டு பிலிப்பைன்ஸ் அரசுக்கெதிராக செயல்படும் அதிருப்தி முஸ்லீம்களை, ராணுவம் தாக்கியதாலே இம்மோதல் ஏற்பட்டுள்ளது.

### நவீன நல்லதங்காள்

ஆலப்புழை, அக்-14— கேரளத்தில் ஆலப்புழைக்கு அருகில் உள்ள வெளியத்து நாடு என்னும் இடத்தைச்சேர்ந்த அரிசனப் பெண்ணொருத்தி, தனது இரண்டு குழந்தைகளையும் கிணற்றில் போட்டு தானும் கிணற்றில் விழுந்து தற்கொலை செய்து கொண்டாள்.

அவளது பெயர் சரோஜினி (வயது 25), அவளது குழந்தைகளின் பெயர் சுனில் குமார் (வயது 5), அஜி (வயது 2)

வறுமையின் கொடுமையால் அந்த ஏழை அரிசனத் தாய் இந்த முடிவுக்கு வந்தாள் என்று கூறப்படுகிறது. இந்தச் சம்பவம் இம்மாதம் 12ம் தேதியன்று நடந்தது.

புராணத்தில் ஒரு நல்ல தங்காளைத்தான் கண்டோம். ஆனல் நமது நாட்டின் வறுமைஎண்ணற்றநல்லதங்காள்களை சிருஷ்டித்துக் கொண்டே இருக்கிறது!

### தன்பாத் நகரில் துப்பாக்கி சூடு நியாயப்படுத்த முடியாதது

பாட்னா, அக். 13— பீகார்மாநிலத்தின் தன்பாத் நகரில், 1973.ம் ஆண்டு நவம்பர் 15-ல் தொழிலாளர்கள் மீதுதொழில்பாதுகாப்பு படையினர் துப்பாக்கிச்சூடு நடத்தி 6 பேர் உயிரை பலிகொண்டது நியாயப்படுத்த முடியாதது என அத்துப்பாக்கிச் சூடுகள்பற்றி விசாரணை நடத்திய ராமன் விசாரணைகமிஷன் கூறியுள்ளது.

மேலும், அத்துப்பாக்கி சூட்டுக்கு தொழில் பாதுகாப்பு படையின் உதவி கமாண்டர் காலர் என்பவரே பொறுப்பு என்றும் ஆத்திரமடைந்த தொழிலாளர்களை கட்டுப்படுத்துவதற்கு எடுக்கப்பட வேண்டிய குறைந்தபட்ச நடவடிக்கைகளுக்கு அதிகமாகவே தொழில் பாதுகாப்பு படையால் எடுக்கப்பட்டுள்ளது என்றும் அந்த அறிக்கையில் கூறப்பட்டுள்ளது.

மேலும் அப்பாதுகாப்பு படை அமமாதிரியான பிரச்சினைகளை கட்டுப்படுத்துவதற்கான பயிற்சிகள் அளிப்பதில் அதன் கமாண்டர் குறைபாடு கொண்டுள்ளார் என்றும் அந்த அறிக்கையில் கூறப்பட்டுள்ளது.

## ரப்பர் கம்பெனிகளுக்கும் ஏற்றுமதி சலுகை

புதுடெல்லி. அக். 12— டயர் ஏற்றுமதிசெய்பவர்களுக்கும் நஷ்டஈடு கொடுக்கும கொள்கையை விஸ்தரிக்க மத்திய அரசு முடிவு செய்துள்ளது.

டயர்தொழிலில்நெருக்கடி ஏற்பட்டுள்ளதால்தான இச்சலுகையை அளிக்க முன்வநதுள்ளதாம.

இநதியாவில் டயர்கள், ட்யூபுகள் தயார்செய்யும் கம்பெனிகள் 8 உள்ளன. அக்கம்பெனிகளின் உற்பத்தி திறன் 75 லட்சம் டியூப்களும, டயர்களும ஆகும. ஆனல் உற்பததி செய்ய அனுமதிக்கப்பட்டதோ 72 லட்சம டயர்கள்தான.

ஆனல் அந்த 8 டயர் கம்பெனிகளும் உற்பத்திசெய்வது 33 லட்சம் டயர்களும் ட்யூபுகளுமே.

எட்டுககம்பெனிகளும ஏற்கெனவே நல்ல தொழில் நுணுக்கம் கொண்டிருந்தவைகள். அனுபவங்களும, தொழிலுக்குரிய ஏனைய பின்னணிகளும் இருந்தன. இவைகளோடு உறபத்திச் செலவு குறைவாக இருந்த காலத்திலும் இதே அளவு தான் டயர் உற்பத்தி செய்யப்பட்டது. இப்போதும அதே அளவு தான உற்பததிசெய்யபபடுகின்றன,

உற்பததியை பெருக்க வேண்டுமானல் ஏற்றுமதியை செய்யப்பட வேண்டும். அதனல்தான் ஏற்றுமதியை ஊக்குவிக்க என்ற பெயரில் டயர்களை ஏற்றுமதி செய்பவர்களுக்கு நஷ்டஈடு கொடுக்க அரசாங்கம் தீர்மானிததுள்ளது.

தோல் பொருட்கள் திடீர் டீ, திடீர் காபி, சிலரசாயனப்பொருட்கள், கயிறுகள் எஞ்சினியரிங் பொருடகள் ஆகியவற்றை மட்டுமஏற்றுமதி செய்பவாகளுககு ரொககமாக நஷ்டஈடு கொடுக்க அரசாங்கம தீர்மானிததிருந்தது. இப்போது அபபட்டியலில டயர் கமபெனியும சேர்ந்துள்ளது.

முதலாளிகளுக்கு [illegible] தொழில்களில நெருககடி ஏற்பட்டால் உற்பததி [illegible] மதி பெருக [illegible] ரில் அவாகளுக்கு [illegible] யாக சலுகைகள் கிடைக்கின்றன.

# தீக்கதிர்

## ஸ்தாபன காங்கிரஸ் தீர்மானம்

திரு. காமராஜ் அவர்களின் மறைவுக்குப் பிறகு தமிழகத்தில் உள்ள ஸ்தாபனக் காங்கிரசின் மாநில செயற்குழுக்கூட்டம் சென்னையில் அக். 11, 12 தேதிகளில் கூடியது. கட்சியை எதிர்நோக்கிய பல பிரச்னைகளை விவாதித்து ஏகோபித்த முடிவுகளாகச் சில முக்கியமான முடிவுகளை வெளியிட்டுள்ளது.

ஸ்தாபனக் காங்கிரஸ் இந்திரா காங்கிரஸ் கட்சியுடன் இணைவதா என்ற பிரச்னையை நன்கு விவாதித்துள்ளதாகத் தெரிகிறது. இந்த இரு காங்கிரஸ் இணைப்புப் பிரச்னை ஆக முக்கியத்துவம் வாய்ந்ததாகக் கருதப்பட்டது இயற்கையே. ஏற்கனவே பிரதமர் இந்திரா காந்திதமிழகஸ்தாபனகாங்கிரசார்காங்கிரஸ்கட்சியில்வந்து சேர்ந்துவிட வேண்டுமென்று விடுத்த வேண்டுகோளும் செயற்குழு முன்பு இருந்தது. போதாக்குறைக்கு மத்திய நிதி அமைச்சர் திரு. சி. சுப்பிரமணியமும் சென்னைக்கு வந்து முகாம் போட்டு ஸ்தாபன காங்கிரஸ் தலைவர்கள் பலரை சந்திக்க விரும்புவதாகவும் அதற்கெனவே வந்திருப்பதாகவும் பகிரங்கமாகவே அறிவித்தார்.

ஸ்தாபனக் காங்கிரஸ் செயற்குழு கூட்டம் இந்த முக்கிய பிரச்சினையில் உடனடியாக அவசரப்பட்டு எந்த முடிவும் தாங்களாகவே எடுக்க விரும்பவில்லை என்று தெரிகிறது. இதில் மாநிலக் கழுவிய முறையில் ஊழியர்களின் கருத்தறிந்தே முடிவெடுப்பதென இறுதியாகத் தீர்மானிக்கப்பட்டுள்ளது.

இதை முன்னிட்டு தமிழகம் முழுவதும் சுற்றுப் பயணம் செய்து ஊழியர்களின் கருத்தறிய தமிழக ஸ்தாபனக் காங்கிரசின் தலைவர் திரு. ப. ராமச்சந்திரன் அவர்கள் தலைமையில் ஒரு சமிதி அமைக்கப்பட்டது. கட்சியின் துணை அமைப்புகளின் முக்கிய பிரதிநிதிகளும் இக்சமிதியுடன் இப்பணியில் செயல்படுவர்கள். நவம்பர் மாதத்திற்குள் இந்தக் கமிட்டி தனது அறிக்கையை சமர்ப்பிக்குமென்றும் அதற்குப் பிறகு ஸ்தாபனக் காங்கிரசின் மாநில பொதுக்குழு கூடி இது சம்பந்தமான இறுதியான முடிவெடுக்குமென்றும் தெரிகிறது.

அதுவரை பிரச்னை ஒத்திப்போடப்பட்டுள்ளது என்ற அறிவிப்பை திரு சி.சுப்ரமணியம் வரவேற்கிறமாதிரி ஆரம்பித்து, கீழுள்ள கருத்து தெளிவாக இருக்கிறது இப்பிரச்னையில் கீழே சென்று கருத்தறிவது அவசியம் தானு என்றும், திரு காமராஜ் அவர்களின் மறைவுக்குப் பிறகு ஸ்தாபனக் காங்கிரஸ் பலவீனமடைந்து விட்டதென்றும், இனி அதனுல் தனியாகச் செயல்படுவது சாத்தியமில்லை என்றும், வேறு கட்சிகளுடன் இணைவதாயிருந்தால் இந்திரா காங்கிரஸ் கட்சியுடன்தான் சேரவேண்டுமென்றும் பேசியிருக்கிறர். இந்தக் கருத்தை நிறைவேற்றிக்கொள்ள பலவிதமான நிர்ப்பந்தங்களை இந்திரா காங்கிரஸ் மேற்கொள்ளுமென்பது எதிர்பார்க்க வேண்டிய ஒரு விஷயமே.

ஸ்தாபனக் காங்கிரஸ் கட்சியை பலப்படுத்தும் செயல்முறை, எதிர்காலத் திட்டம் இவை குறித்து இப்போது நிர்ணயிக்கப்பட்டுள்ள கமிட்டி அறிக்கை சமர்ப்பித்து அதன் மீது இறுதியான முடிவெடுக்கப்படும் வரை யில், திரு. காமராஜ் அவர்களின் வழிகாட்டுதலுடன் சென்ற பிப்ரவரியிலும், ஜூலையிலும் தமிழ்நாடு (ஸ்தாபன) காங்கிரஸ் கமிட்டி நிறைவேற்றிய இரு கொள்கை தீர்மானங்களே கட்சி செயல்படுவதற்கு வழிகாட்டுதலாக இருக்குமென்றும் தெரிகிறது.

இவ்விரு தீர்மானங்களில் ஜூலை 2ம்நாள் நிறைவேற்றப்பட்ட தீர்மானம் உடனடி முக்கியத்துவம் வாய்ந்தது, அவசரநிலை பிரகடனம் சம்பந்தப்பட்டது. இதன்படி செயல்பட வேண்டுமென்று இடைக்காலத்திற்கு வழிகாட்டியுள்ளது மிகவும் சரியானதே.

இத்தீர்மானம் "நாட்டு மக்களின் அடிப்படை உரிமைகள்" நெருக்கடி நிலைமை என்கின்ற பெயரால் பறிக்கப்படுவதற்கு எவ்வித நியாயமும் கிடையாதென்று கூறி "இன்று கைது செய்யப்பட்டுக் காவலில் வைக்கப்பட்டுள்ள அனைத்து தலைவர்களையும், தொண்டர்களையும், உடனடியாக விடுதலை செய்வதுடன், இதுகாறும் போடப்பட்டிருக்கும் தடைகள் "மக்களின் ஜனநாயக உரிமைகளை பறிக்கும் வகையில் பிரகடனப்படுத்தப்பட்டுள்ள நெருக்கடி நிலையை உடனடியாகத் திரும்பப்பெற வேண்டுமென்று மத்திய அரசை வலியுறுத்துவதுடன் நம காங்கிரஸ் ஊழியர்களும், பொதுமக்களும் விழிப்புடன் இருந்து ஜனநாயகத்தைக் காக்க எவ்வித தியாகத்திற்கும் தயாராக இருக்கும்படி கேட்டுக் கொள்கிறது".

இந்த தீர்மானத்தை செயல்படுத்த ஸ்தாபனக் காங்கிரஸ் தன்மை உரிய நடவடிக்கைகளை மேற்கொள்ளுமென திடமாக நம்புகிறோம். இந்த அடிப்படையில் ஸ்தாபன காங்கிரசும் இதே நோக்கமுள்ள இதர கட்சிகளுடன் சேர்ந்து மக்களின் பிரஜா உரிமைகளை மீண்டும் முழுமையாக வழங்கப் படவேண்டுமென்று மத்திய அரசை வற்புறுத்த முன்வருவது தமிழகத்திற்கு மட்டுமின்றி அகில இந்திய அரசியலிலேயே ஒரு முன்னேற்றமான மாறுதலைக் கொண்டு வருவதற்கு துணை புரியுமென்று கருதுகிறோம்.

## குடிநீர் வடிகால் வாரியத்தில் 300 ஊழியர்கள் வேலைநீக்கம்?

மதுரை, அக். 14—

தமிழ்நாடு அரசின் கீழ் உள்ள தமிழ்நாடு குடிநீர் வடிகால் வாரியத்தில் பணி புரியும் சுமார் 300 தற்காலிக ஊழியர்கள் திடீரென வேலையிலிருந்து நீக்கம் செய்யப் படுகிறார்கள் என்று சொல்லப்படுகிறது.

இதற்கான அவசர உத்திரவுகள் சென்னையில் உள்ள குடிநீர் வடிகால் வாரியத்தின் நிர்வாக இயக்குநரால் கடந்த 7—10—75-ந் தேதியன்று அனுப்பப்பட்டுள்ளனவாம்.

இந்த உத்திரவுகள் மாநிலம் முழுவதுமுள்ள குடிநீர் வடிகால வாரியத்தின் எல்லா நிர்வாகப் பொறியாளர்களுக்கும் மேற்பார்வைப் பொறியாளர்களுக்கும் அனுப்பப்பட்டுள்ளனவாம்.

இந்த உத்திரவுப்படி, 16—3—73-ந் தேதிக்குப்பின் வேலை நியமனம் ஆன சுமார் 300ஊழியர்கள் உடனடியாக வீட்டுக்கு அனுப்பப்படுகிறார்களாம்.

இவ்வாறு வீட்டுக்கு அனுப்பப்படுவோரில், என் எம் ஆர் [தற்காலிக) ஊழியர்களும், வேலைநிதி (ஒர்க் சார்ஜுடு) ஊழியர்களும் இளநிலை உதவியாளர்களும் உள்ளனராம்.

இந்திய கம்யூனிஸ்ட் கட்சி (மார்க்சிஸ்ட்) தமிழ் மாநிலக்குழு சார்பில் தீக்கதிர் அச்சகத்தில் (6-16பை பாஸ்ரோடு, மதுரை625018) அச்சிட்டு வெளியிடுபவர் ... மூ ...யா.

### கூலிப் பிரச்சாரகர்கள் பாராட்டிய

# ஜப்பான் பொருளாதாரத்தின் பரிதாப நிலை

## மக்களின் உணவு நாளுக்கு நாள் வீழ்ச்சி

டோக்கியோ, அக். 2— "பொருளாதார வீழ்ச்சி நாளுக்குநாள் மோசமாகிக் கொண்டிருக்கிறது. தனிநபர்கள் அன்றாடம் உபயோகிக்கும் பொருட்களின் அளவுகுறைந்துகொண்டே போகிறது. வருட அடிப்படையில் பார்த்தால் கடந்த மூன்று மாவட்டங்களில் இறக்குமதி படுவீழ்ச்சி ஏற்பட்டுள்ளது.

இன்றைய ஜப்பான் பொருளாதார நிலைமையை இப்படி எடுத்துக்காட்டியுள்ளார், அங்காட்டு பத்திரிகை ஒன்றின் விமர்சகர் ஒருவர்.

### பொருட்களின் அளவு குறைகிறது

முதலாளித்துவத்தின் கூலி எழுத்தாளர்களும் பெருமையாகப் பேசப்படும் நாடு ஜப்பான்.

ஜப்பான் நாட்டு மக்கள் உலகத்திலேயே அதிக கடுமையாக உழைக்கக்கூடியவர்கள். உழைப்புக்கு எதிரான எந்நடவடிக்கையையும் அந்நாட்டு தொழிலாளிகளும்,மக்களும் மேற்கொள்ளமாட்டார்கள். அதனால் தான் அந்நாட்டில் மக்களின் வாழ்க்கை கஷ்டமாகவும் இல்லை பிரச்சினையாகவும் இல்லை என்றெல்லாம்வாய்ப்பறை அடிப்பார்கள்.

இப்படிப்பட்ட பிரச்சாரத்தின் நோக்கம், இந்திய நாட்டு முதலாளித்துவ வேங்கைகளும் நிலப்பிரபுத்துவ ஓநாய்களும்இந்நாட்டுதொழிலாளிகளின் மக்களின் ரத்தத்தை உறிஞ்சுவதை மறைப்பதற்கே

ஆனால் கூலிப் பேச்சாளர்களும், எழுத்தாளர்களும் போற்றிப் புகழ்ந்த ஜப்பானில்தான் இன்று அந்நாட்டு மக்கள் உபயோகிக்கும் பொருள்களின் அளவு நாளுக்கு நாள் குறைந்து வருகிறது.

### முதலாளித்துவத்தின் விளைவு?

அதுமட்டுமல்ல, "உழைப்பையேகுறி"யாகக்கொண்ட அந்நாட்டு மக்களிடம் பெருகி வருபவைகளில் ஒன்று வேலையில்லாத் திண்டாட்டம்.புதிதாக வேலைகளை உண்டாக்க முடியவில்லை என்பதுமட்டுமல்ல, இருக்கின்ற வேலைகளும் பறிபோய்க் கொண்டிருக்கின்றன. காரணம், பெரிய பெரிய தொழில்களெல்லாம் பகுதி பகுதியாகவோ அல்லது முழுமையாகவோ மூடப்படுகின்றன. தொழிலாளர்கள் வீட்டுக்கு அனுப்பப்படுகின்றனர். அன்றாட வாழ்க்கை உபயோகம் குறையாமல் என்ன செய்யும்?

உலக முதலாளித்துவத்தில் ஏற்பட்ட நெருக்கடி ஜப்பானையும் கடுமையாகத் தாக்கியது. உற்பத்தி செய்யப்பட்ட பொருட்கள் வெளிநாடுகளில் விலைபோகவில்லை. வீணவு—பொருள் தேக்கம். தொழில் முடிவிழாக்கள், வேலை இன்மை பெருக்கம். மொத்தத்தில் பொருளாதார மந்தம்.

எனினும், தினம் தினம் செத்துக் கொண்டிருக்கும் ஜப்பான் முதலாளித்துவத்தைக் காப்பாற்றித் தீர வேண்டும் என்ற பதில் ஜப்பான் அரசாங்கம் தீர்மானமாக இருக்கிறது. அது தானே அதன் கடமை!

பொருளாதார மந்தத்தை எதிர்த்த போர் என்ற பெயரில் அரசாங்க கஜானுவிலிருந்து ஜப்பான் முதலாளிகளுக்கு மிகக்குறைந்த வட்டியில் ஐநூறு கோடி டாலர் (4000 கோடிரூபாய்) கொடுக்கத்திட்டமிட்டுள்ளது. அரசாங்க கஜானுக்கள்மூலமும் பேங்குகளின் மூலமும் இந் நடவடிக்கை மேற்கொள்ளப்படுமாம்.

மக்களிடம் வரியாக வாங்கிய பணத்தை கடனுக முதலாளிகளுக்கு இப்படி அள்ளிக்கொடுத்தேனும் இந்த ஆண்டு 6 சத வீத வளர்ச்சியை ஏற்படுத்தியாகவேண்டும் என அரசாங்கம் தீவிரமாக திட்டமிட்டுள்ளதாம். பாவம் ஜப்பான். அமெரிக்க ஏகாதிபத்தியம்தனதுகௌரவத்தை காப்பதற்காக வியட்னும் யுத்தப் பொறியில் அகப்பட்டுக்கொண்டு அலறிக் கொண்டிருந்தபோது சந்தர்ப்பத்தைப் பயன்படுத்தி ஏற்றுமதியைப்பெருக்கியது. அமெரிக்காவின் மார்க்கெட்டையெல்லாம் பிடித்தது. அப்போதெல்லாம் அதன் வருடாந்திரவளர்ச்சி 12 சதவீதம் என்றும் 15 சதவீதமென்றும்இரட்டை எண்களில் சென்றுகொண்டிருந்தது.

ஆனல், இன்று6 சதவீதம் உற்பத்தியைச் செய்தாக வேண்டும் என்று ஜப்பான் அரசாங்கம் கச்சை கட்டிக் கொண்டிருக்கிறதாம். ஆனல் களத்தில் இருக்கிற அந்நாட்டு முதலாளிகளுக்கு இந்த குறைந்த அளவுவளர்ச்சியைக் கூட செய்துமுடிக்க முடியாது என்ற அவநம்பிக்கையில் உள்ளனர்.

முதலாளித்துவம்நெருக்கடியில் திணறும்போது அதைக் காப்பதற்கென்றே "அவதாரம்" எடுத்த அரசுகளுக்கு இதைவிட வேறு என்ன கடமை இருக்க முடியும்?

இந்திய முதலாளித்துவம் கொடிகட்டிப்பறக்க வேண்டும்என்ற ஆசையில் அன்னிய நாடுகளில் இந்திய முதலாளிகள்முதலீடுசெய்ய அதுவும் அமெரிக்காவுடன் ஏற்பாடுகள் செய்தும்தொழிலாளர்களின் குறைந்தபட்ச போனசை பாதிக்கும் குறைவாக வெட்டி இந்திய முதலாளிகளின்கனவை நனவாக்கியும்,

வர்த்தகத்துக்கும்தொழிலுக்கும் தேவையான நிதி உதவியை தருவோம் என வாக்குறுதி அளித்தும்,

இரும்பு, சிமிண்டு, எரிவாயு, வனஸ்பதி, அலுமினியம் ஆகிய பொருட்களுக்கு விலைஉயர்வைஅனுமதித்தும்,

இப்படி சமீப காலத்தில் அவசர அவசரமாக இந்திய முதலாளிகளின் விருப்பத்தை இந்திய அரசுசெய்யவில்லையா?

### பொருளாதார நெருக்கடியை தீர்க்குமா?

அமெரிக்காவில் பாருங்கள். அமெரிக்க சர்வதேச முதலாளிகள் மீதும் உள்நாட்டு முதலாளிகள் மீதும் போடப்பட்டுவந்த எக்சைஸ் வரியை அமெரிக்க அரசாங்கம் ரத்துச் செய்ததன்மூலம் பல ஆயிரம் கோடி டாலரை அவர்கள் சுருட்டிக்கொள்ள அனுமதிக்கவில்லையா?

தன்னை சோசலிஸ்ட் வாதி என்று சொல்லிக் கொள்ளும் பிரிட்டனின் பிரதமர் வில்சன் அரசாங்கம் மட்டும் இப்படிப்பட்ட "நல்ல" காரியங்களை செய்வதில் சளைத்தவரா?

அதளபாதாளத்தை அடைந்து கொண்டிருக்கும் பிரிட்டிஷ் முதலாளித்துவத்தைக் காக்க பலநூறு கோடிப் பவுண்டுகள் அரசாங்கஜானுவிலிருந்து மக்கள் வரிப் பணத்தை அந்நாட்டு முதலாளிகளுக்கு கொடுத்து உதவுவதாக ஏற்கெனவேபிரகடனம் செய்தவராயிற்றே!

அது மட்டுமா, பிரிட்டனின் பொருளாதாரம் காப்பாற்றப்பட வேண்டுமானல் பல லட்சம் பேர் வேலை இழக்க வேண்டும். எவ்வளவுதான் விலை ஏறினலும் 6 பவுண்டுக்கு மேல் சம்பள உயர்வுகூடாது என அறிவித்து விட்டாரே! அது மட்டுமா? அவர் சொன்னது சரியானதுதான் என அந்நாட்டு தலையாட்டி தொழிற்சங்கத் தலைவர்களையும் ஒப்புக்கொள்ளச்செய்து விட்டாரே?

இம்மாதிரியாக முதலாளித்துவ நாடுகளில் முதலாளிகளுக்கு சலுகைகள் அளிக்கும போதெல்லாம் பொருளாதார நெருக்கடியைத் தீர்க்க எடுக்கும் நடவடிக்கைகள் என அடித்துக் கூறி விடுவார்கள்.

மக்களை எவ்வளவு காலம் ஏமாற்ற முடியும்?

## போராடும் பாரி மிட்டாய் தொழிலாளர் உதவி நிதி

ஆட்குறைப்பு, லே-ஆப் ஆகிய இரண்டையும் எதிர்த்து கடந்த 4 மாத காலமாக போராடிவரும் நெல்லிக்குப்பம் பாரி மிட்டாய்த் தொழிலாளர்களுக்கு சகோதர ஆதரவைத் தெரிவிக்கும் பொருட்டு இன்றே

**நிதி அனுப்புவீர்!**

**நிதி அனுப்ப வேண்டிய முகவரி**

சி. கோவிந்தராஜன்.
1. ஸ்கூல் தெரு,
நெல்லிக்குப்பம்.

**காரைக்காலிலிருந்து ஐந்து ரூபாய்**

காரைக்கால்மில்தொழிலாளர் சங்கம் [சிஐடியூ] சார்பில் ஐந்து ரூபாய் அனுப்பப்பட்டுள்ளது.

## பாபுவாகினி ஐ நா சபையின் உறுப்பினராகியது

ஐக்கியநாடுகள், அக். 11—

ஆஸ்திரேலியாவுக்கு அருகில் உள்ள புதிய சுதந்திர நாடான பாபுவாகினி நாட்டை ஐ. நா. சபையில் உறுப்பினராகச் சேர்த்துக் கொள்வதென ஐ நா பொது அசெம்பிளியில் கடந்தவெள்ளிக்கிழமை ஏகமனதாக தேர்ந்தெடுக்கப்பட்டது. பாபுவாகினியோடு, ஐ நா சபையின் உறுப்பினர் நாடுகளின் எண்ணிக்கை 142 ஆகும்.

மேலும், மடாகாஸ்கருக்கு அருகில் உள்ள கோமாராதீவும் ஐ நா சபையில் உறுப்பினராக சேர்வதற்கு அனுமதி கேட்டுள்ளதாகத் தெரிகிறது. இத்தீவு பிரெஞ்சு நாட்டின் கட்டுப்பாட்டில் இருந்தது. இத்தீவின் ஜனத்தொகை 2 லட்சத்து 86 ஆயிரம் பேர். இவர்களில் பெரும் பகுதியினர் முஸ்லீம்கள்.

### பிரிட்டிஷ் முதலாளிகளுக்கு

## நஷ்டஈடு கொடுக்கப்படுமாம் இலங்கை பிரதமரின் திட்டம்

கொழும்பு, அக். 12—

இத்தனை ஆண்டுகளாக இலங்கை தொழிலாளர்களை சூறையாடி கொள்ளை லாபம் கொண்ட பிரிட்டிஷ் முதலாளிகளின் தோட்டங்களை அரசுடைமையாக்கும் போது அவர்களுக்கு நியாயமான, தேவையான நஷ்டஈடு கொடுக்கப்படுமாம்.

இதற்கான வாக்குறுதியை இலங்கை பிரதமர் பண்டாரநாயகா, பிரிட்டிஷ் பிரதமருக்கு கொடுத்திருக்கிருராம்.

நஷ்டஈடு கொடுத்து பிரிட்டிஷ் முதலாளிகளின் தோட்டங்களைத்தேச உடைமையாக்குவதற்கு வகை செய்யும் மசோதா கடந்த வெள்ளிக்கிழமை இலங்கை நாடாளுமன்றத்தில் சமர்ப்பிக்கப்பட்டது.

ஆனல் அம்மசோதா மீதுபேசிய அனைத்து பார்லிமெண்ட் உறுப்பினர்களும் நஷ்டஈடு கொடுப்பது என்பதற்கு கடும் எதிர்ப்பு தெரிவித்துள்ளனர். நஷ்டஈடு கொடுப்பதற்கு எதிர்ப்பு கடுமையாக இருப்பதால், அம்மசோதா மீதான விவாதம் ஒத்திப் போடப்பட்டுள்ளது.

இம்மசோதா மீது இலங்கை சமசமாஜ் கட்சி உறுப்பினர் கால்வின் டி சில்வா பேசினர். அவர் பேசும்போது, பிரிட்டிஷ் முதலாளிகள்தான்மூலதனத்தை விட பலமடங்கு லாபத்தின் மூலமாகவும டிவிடெண்டுகள் மூலமாகவும்சம்பாதித்து விட்டார்கள். ஏதாவது நஷ்டஈடு கொடுப்பதாக இருந்தால் பிரிட்டிஷ் முதலாளிகள் தோட்டம் ஆரம்பிப்பதற்காக நிலத்தை இழந்த விவசாயிகளுக்கும் பிரிட்டிஷ் பெரும் லாபத்திற்காக அடிமைகளாக இருந்த இந்திய வம்சாவழி தொழிலாளர்களுக்கும கொடுக்கவேண்டும என்று குறிப்பிட்டார்.

## பம்பாயில் பஸ்கட்டணம் உயருகிறது

பம்பாய். அக். 13—

பம்பாயில் பஸ் கட்டணம் உயர்த்தப்படுகிறது. மாநகரத்தின் பஸ் போக்குவரத்தை நடத்தி வரும 'பெஸ்ட்' நிர்வாகம் [பம்பாய் எலெக்ட்ரிசிடி, சப்ளை அன்ட் டிரான்ஸ்போர்ட்] தனது 1976—77 ஆம் ஆண்டுக்கான பட்ஜெட்டில் ஏற்பட்டுள்ள 3 கோடியே 59 இலட்சம் ரூபாய் பற்ருக் குறையைச் சரிக்கட்டவே பஸ் கட்டணத்தை உயர்த்துகிறதாம்.

இத்தகவலை 'பெஸ்ட்' நிர்வாகி பி பி கெர்கார் கடந்த 9ந்தேதி நடந்த வருடாந்திர பட்ஜெட் கூட்டத்தில் தெரிவித்தார்.

## 3-வது குழந்தை பெற்றால் ரூ. 50 அபராதமா?

சென்னை, அக். 11—

இரண்டாவது குழந்தைக்குப் பிறகு மூன்ருவது அல்லது அதற்கு மேற்பட்ட குழந்தையின பிரசவத்துக்காக மாநகராட்சி மகப்பேறு நிலையங்களுக்கு வருவோரிடம் 50 ரூபாய் வீதம் கட்டணம் வசூலிப்பது என்று சென்னை மாநகராட்சி உத்தேசித்துள்ளது. இத்திட்டத்தை அடுத்த அக்.1முதல் அமுலாக்கஉத்தேசிக்கப்பட்டுள்ளது.

குடும்பநலத் திட்டம் வெற்றிகரமாக செயல்பட வேண்டும் என்ற நோக்கத்துடன் இந்தப் புதிய திட்டம் அமுல்படுத்தப்படவேண்டும் என்று தனி அதிகாரி டி வி. அந்தோணி கூறியுள்ளார்.

## ஆசிரியருக்கு...

### புதுக்கோட்டை மாவட்டத்தில்

## ஒருலட்சம்ஏக்கர்நெல் சாகுபடி பாதிப்பு

ஐயா,

புதுக்கோட்டை மாவட்டத்தில், திருமயம் தாலுகா, குளத்தூர் தாலுகா, ஆலங்குடி தாலுகா, அறந்தாங்கி தாலுகா ஆகிய பகுதிகளில் பருவமழை தவறியதால் சுமார் ஒரு லட்சம் ஏக்கர் நிலத்தில் நெல் சாகுபடி பாதிக்கப்பட்டுள்ளது.

புதுக்கோட்டைக்கு அருகாமையில் உள்ள கவிநாடு கண்மாய்தான் மிகப் பெரிய கண்மாய். சுமார் ஐந்து மைல் சுற்றளவு உள்ளது. ஆனல் அக்கண்மாயில்ஒருசொட்டுதண்ணீர் இல்லை. அதேபோல இப்பகுதியில் உள்ள எந்தக் கண்மாயிலும் தண்ணீர் இல்லை.

சென்ற ஆண்டைப் போலவே, இந்த ஆண்டும் விளைச்சல் இல்லாமற் போய்விட்டதே என்று விவசாயிகள் கண்கலங்கி நிற்கிருர்கள், வழிவகைதெரியாது திகைக்கிருர்கள்.

எனவே, இந்த விவசாயிகளுக்கு உணவுக்கு வசதி செய்யும்பொருட்டு மீண்டும் வறட்சிப்பணிகளைத் தொடர வேண்டுமாய்தமிழக அரசையும்அதிகாரிகளையும்கேட்டுக் கொள்கிறேன்.

இங்ஙனம்,
டி. குருசாமி,
காவேரி மில்ஸ்.

### அக். 24 முதல் 31 முடிய மாதர் சங்கம் நடத்தும்

## ஒரு இலட்சம் கையெழுத்து இயக்கம்

### இல்லந்தோறும் செல்வீர்!

அன்புச் சகோதரிகளே,

தமிழக ஜனநாயக மாதர் சங்க மாநிலக் குழுவின் முடிவான ஒரு இலட்சம் மாதர்களிடம் கையெழுத்து வாங்கும் இயக்கத்தை வெற்றிகரமாக நடத்தி முடிக்க தீவிரமான தயாரிப்பு வேலைகளில் முனைந்து ஈடுபடுவீர்!

∴ ஏரியா, [கிராம வாரியாக மாதர் சங்க ஊழியர்களது கூட்டங்கள் நடத்தி, கையெழுத்து வாங்குவதற்கான கோட்டாவும் 'ஸ்குவாடு'களும் நிர்ணயிக்கவும்.

∴ இம்மாதம் 24ந் தேதி முதல் 31ந் தேதி முடியஒரு வாரம் முழுவதும்—வீடு வீடாகச் சென்று—பிரதமர் திருமதி இந்திராகாந்திக்கு அனுப்புவதற்காக ஒன்றும், முதலமைச்சர் திரு கருணாநிதிக்கு அனுப்புவதற்காக ஒன்றுமாக—இரண்டுமகஜர்களில் மாதர்களிடம் கையெழுத்து வாங்க வேண்டும்.

∴ இந்தக் கையெழுத்து இயக்கத்தைப் பிரச்சாரம் செய்யும் வகையில் மாலை நேரங்களில் தெருமுனைக் கூட்டங்களும், கிராமக் கூட்டங்களும் நடத்தப்பட வேண்டும்.

∴ கையெழுத்துக்கள் வாங்குவதற்கான மகஜர்களும், அச்சிடுவதற்கான துண்டுப் பிரசுர மாதிரிப் பிரதிகளும் மாவட்டக் குழுக்களுக்கு அனுப்பப்பட்டுள்ளன.

∴ கையெழுத்து வாங்கச் செல்லும் போது பிரசுர விற்பனையும், வீடுகளிலும் கடை வீதிகளிலும் உண்டியல் வசூலும் செய்யப்பட வேண்டும்.

∴ புதிய பகுதிகளில் மாதர்சங்க அமைப்புகளை உருவாக்க வேண்டும்.

∴ இந்த இயக்கம் குறித்து தட்டிகளில் எழுதி வைத்து விளம்பரம் செய்ய வேண்டும்.

அக். 24 முதல் 31 வரையிலான ஒரு வாரகாலம் முழுவதும்—நாள்தோறும் கையெழுத்து இயக்கமே முக்கியப் பணியென செயல்பட்டு, இயக்கத்தை வெற்றிகரமாக்கும்படி வேண்டுகிறோம்.

கே.பி ஜானகியம்மாள் — தலைவர்
பாப்பா உமாநாத் — செயலாளர்
தமிழக ஜனநாயக மாதர் சங்கம்

### கஷ்டத்தில் உழலும் நெசவாளர்களுக்கு

## ஒப்பந்தக் கூலி கூட தர மாஸ்டர் வீவர்கள் மறுப்பு

### சிஐடியூ புகார்

பரமக்குடி, அக். 15—

நெசவுத் தொழிலாளர்கள் தற்போது கஷ்டத்திலும் வறுமையிலும் உழன்று கொண்டிருக்கும்போது ஒப்பந்தப்படியான கூலியையும் கூட குறைத்துத் தருகிருர்கள் மாஸ்டர் வீவர்கள்.

கடந்த 2-2-75ந் தேதியன்று பரமக்குடி-எமனேஸ்வரம் வட்டார மாஸ்டர்வீவர்களுக்கும் தொழிற்சங்கங்களுக்குமிடையே செய்து கொண்ட ஒப்பந்தத்திற்கு விரோதமாக கூலிகுறைக்கப் படும் அக்கிரமத்தை தடுத்து நிறுத்தக் கோரி தாசில்தாரிடம், நெசவுத் தொழிலாளர் சங்க (சிஐடியூ) செயலாளர் தோழர் தி.ப. மோதிலால் தலைமையில் சென்ற தூதுக்குழு வற்புறுத்தியது. மகஜர் ஒன்றும் தாசில்தாரிடம் அளிக்கப்பட்டது.

தேங்கியுள்ள மற்றும் தனியார் கூட்டுறவு நிறுவனங்களில் உள்ள ஜவுளி இருப்புகளை அரசு உடன் கொள்முதல் செய்ய வேண்டும், கடன் சுமையால் அவதிப்படும் நெசவாளர்களுக்கு நிவாரணம் அளிக்கும வகையில் பழையகடன்களை ரத்து செய்வதுடன், நெசவாளர் குடும்பத்துக்கு ரூ 2000 வீதம் நீண்டகாலக் கடன் தரவேண்டும்.

கைத்தறித் தொழிலைநம்பியுள்ள மாஸ்டர்வீவர்களுக்கு தாராளகடன்கொள்கையை மத்திய அரசு அனுசரிக்க வேண்டும், உணவுப்பொருட்களின் விலையை குறைக்க வேண்டும். அத்தியாவசியப் பொருட்களின் உற்பத்தி மற்றும் விற்பனையை அரசே ஏற்று நடத்த வேண்டும், குறைந்தபட்ச போனஸ் வேண்டும்—ஆகிய கோரிக்கைகளும்மகஜரில் வற்புறுத்தப்பட்டிருந்தன.

இக்கோரிக்கைகள் சம்பந்தமாக விரைவில்தக்க நடவடிக்கை எடுப்பதாக தாசில்தார் உறுதியளித்தார்.

## பேங்க் ஊழியர் தலைவரின் 'விசுவாசம்'

புனு, அக். 12—

குறைந்த பட்சபோனசை பாதிக்கும் குறைவாக குறைத்து மத்திய அரசு வெளியிட்டுள்ள அவசரசட்டத்தின மீதான எதிர்ப்பானது, இந்திரா காந்தியின் 20 அம்ச பொருளாதாரத் திட்டத்தை ஆதரிப்பதற்கு தடையாக இருக்கக் கூடாதாம். அகில இந்திய பேங்க் ஊழியர்கள் சங்கத்தின் பொதுச்செயலாளர் பிரபாத்கார் கூறியுள்ளார்.

தமிழ்நாடு பேங்க் ஊழியர்கள் சங்க மாநாட்டில் பேசும்போது அவர் மேற்கண்டவாறு தனது விசுவாசத்தை காட்டியுள்ளார்.

பேங்க் ஊழியர்கள் போனஸ் கோருவதை போனஸ் அவசரச் சட்டம் மறுக்கிறது என்பது உண்மைதான். எனினும் போனஸ்அவசரசட்டதை, அவசர நிலைப் பிரகடனத்தோடோ அல்லது 20 அம்ச திட்டத்தோடோ இணைக்கக் கூடாது.

மேலும் 20 அம்சத் திட்டம் ஏதோ ஒரு கட்சிக்கு சொந்தமானது எனக்கருதுவது தவறு என்று பேங்க் ஊழியர்களை எச்சரித்தார்.

மேலும் அவர் தனது வக்காலத்து பேச்சைதொடர்கிருர். 20 அம்சத்திட்டம் ஏற்றதாழ்வை குறைக்குமாம். இத்திட்டம் நிறைவேறினல் சமூக மாற்றத்திற்கு வழிஏற்படுத்துமாம்.